விலை 30 காசு



# பாரதி புகழ் பரப்பியது கம்யூனிஸ்டுகளே!

தோழர்கள்: ஜீவா, ஆர். நல்லகண்ணு,
தா. பாண்டியன், கவிஞர் பா அண்ணன், கட்டுரைகள்
—தொகுப்பு : ம. நவநீதன்—

## ஜீவாவின் பாரதி விழாச் சொற்பொழிவு

அன்பும் அறிவும் மிக்க தலைவர் அவர்களே,

சகோதர சகோதரிகளே,

இந்த பாரதியின் 81-வது பிறந்த நாளைய விழாவில் பங்கு கொள்ளும் வாய்ப்புக் கிடைத்ததற்காக நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். தாகூர் நூற்றாண்டு விழாவிற்குச் சென்றபோது, அங்கு பாரதப் பெருமக்கள் காட்டிய பேருணர்ச்சியைப் பார்த்தபோது, தமிழ்நாட்டில் பாரதியின்

---

பாரதி கம்யூனிஸ்டா? இல்லையா? என்கிற ஆராய்ச்சியே தேவை இல்லை, கவிஞன் என்றாலே அவன் கம்யூனிஸ்டாகத் தான் இருக்கவேண்டும்.

—அமைச்சர் கா. காளிமுத்து 16-2- 2ல் 'பாரதியும் யுகப் புரட்சியும்' நூல் வெளியீட்டு விழாவில்.

---

வெளியிட்டோர் : அருண்குமார் பதிப்பகம், சென்னை-2

பிறந்த நாளை மையமாக வைத்து, அந்த ஒற்றுமையுணர்ச்சியை எல்லா மாகாணங்களிலும் எழுப்பும் வகையில் ஒரு விழா எடுக்க வேண்டுமென்ற எண்ணம் எங்களுக்குத் தோன்றியது. அதில் நண்பர் திரு. அகிலனும் ஒருவர். அது வர வர விரிவடைந்து, நாமெல்லாம் பாராட்டத் தகுந்த விதத்தில், பெருமையும் மகிழ்ச்சியும் கொள்ளத்தக்க விதத்தில், அரசாங்கத்தினராலேயே முன் முயற்சி எடுக்கப் பட்டு நடைபெறும் இந்தப் பாரதியின் பிறந்த நாள் விழா விலே பங்கு கொள்ளும் பெரும் பேரு கிடைத்ததற்காக நான் பெரிதும் பெருமைப்படுகிறேன். இந்த விழாவில் நிற்கிறபோது, எனக்கு பாரதியைப் பற்றி ஏற்படக்கூடிய சில எதிரொலிகளை உங்கள் முன் வைக்க விரும்புகிறேன்.

பாரதி தமிழ் மண்ணில் பிறந்தான். தமிழகத்தில் தங்கி, அவன் உலகத்தைத் தன்னதாக்கிக் கொண்டு வளர்ந்தான். பாரதி பல தத்துவங்களை உண்டு, அவனுக்கு வேண்டிய ஒரு சூழ்நிலையை வகுத்துக் கொண்டான். அதே காலத்தில் உலகத்தோடும் ஒட்டி வாழ்ந்தான், வளர்ந்தான். அவன் உலகத்திற்கு ஒரு பெரிய தத்துவ மரம் என்றே எனக்குப் படுகிறது. அவன் கவிதைகளை எடுத்துக் கொண்டாலும் சரி, கட்டுரைகளை எடுத்துக் கொண்டாலும் சரி, அவைகளிலே சென்ற நூற்றுண்டிற்கும், இந்த நூற்றுண்டிற்கும் உலகத்தில் சிறந்து விளங்கக் கூடிய ஜனநாயகப் பண்பாட்டை நாம் பார்க்க முடிகிறது. அதோடு மட்டுமல்லாமல், தமிழ்நாட்டின் சமுதாய வரலாற்றோடு வர வர வளர்ந்து செல்கிறன், நமது பாரத சமுதாயம் வரலாற்று ரீதியாக வளர்ந்து கொண்டே போகக்கூடிய வளர்ச்சியின் அடிப்படையில் கணக்குப் போட்டு வந்த வகையிலே பல்வேறு பொருள்களை நமக்கு எடுத்துக் காட்டுகிறன்.

அதனுல்தான் இன்று இந்த அளவுக்கு நமது பாரத சமுதாயம் வளர்ந்து வந்திருக்கிறது. அவனது பாடல்களிலே தனிப்பட்ட ஒரு கருத்து முத்திரையை அவன் வைத்தான். அதே சமயத்தில் அவன் உலகத்தையும் எட்டிப் பார்த்தான். தமிழைப் பார்த்தான். தமிழ் நாட்டு

மக்களை பார்த்தான். ஆனால் அதே நேரத்தில் பாரத நாட்டின் பெருமையையும் ஒட்டு மொத்தமாகப் பார்த்தான். உலகத்திலே உள்ள மனித வர்க்கம் எப்படி வாழவேண்டுமென்று அவன் வழி காட்டுகிறான். இந்திய மக்கள் அனைவரும் எப்படி ஒன்றுபட்டு, ஒருமைப்பாட்டு உணர்ச்சியோடு வாழ வேண்டுமென்று கூற வந்தவன், அதோடு மட்டும் நிற்காமல் உலகத்திலுள்ள எல்லா மக்களும் எப்படி வாழ வேண்டுமென்று வழி காட்டுகிறான் என்கிற கருத்தைத் தான் நான் இன்றைக்கு உங்களுடைய கருத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

பாரத நாட்டின் சுதந்திரத்திற்கு அவனது கவிதைகள் பெரிதும் நமக்கு உதவின. சுதேசிக் கிளர்ச்சியில் ரத்தம் கொதிக்கும் வகையில் எழுச்சி ஏற்பட அவனது பாடல்கள் நம் இயக்கத்திற்கு உதவி செய்தன. 1924-ல் போராட்டம் ஏற்பட்டபோது, அவனது ''தாயின் மணிக்கொடி'' பாடல் நமக்குப் பெரிதும் உதவியது. அதிலே இந்திய மக்கள் தங்கள் கொடியினைக் காக்க எப்படி இருக்க வேண்டுமென்று சிறந்த முறையில் விளக்கியிருக்கிறான். அதற்குப் பிறகு, 'அச்சமில்லை, அச்சமில்லை' என்ற பாடலின் மூலமாக நம் கண்களில் ஒளி பிறக்கச் செய்கிறான். பின்னர் நமக்குச் சுதந்திரமும் கிடைத்தது. அதற்கும் அவன் தனது தீர்க்க திருஷ்டியின் மூலமாக ஒரு பாட்டைச் சமைத்து வைத்தான். அது தான், ''ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்'' என்பது. பின்னால் நாட்டிலே நடக்கக்கூடிய காட்சிகளை யெல்லாம் சித்திரித்துக் காட்டுகிறான். அதோடு மட்டுமல்ல, 'தேசிய இன எழுச்சியின் சிறப்பைப் பற்றியும், செந்தமிழின், செந்தமிழ் நாட்டின் சிறப்பைப் பற்றியும் விளக்கியிருக்கிறான். சுதந்திரம் கிடைத்து விட்டப் பிறகு நாம் செய்யவேண்டிய தொழில்களைப் பற்றியும் குறிப்பிட்டு இருக்கிறான் ''இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவோமே'' என்று நாம் சுதந்திரம் அடைந்துவிட்ட பிறகு செய்ய வேண்டிய தொழிலைப் பற்றியும் தீர்க்க தரிசனமாகக் கூறியிருக்கிறான்.

அப்படி சுதந்திரம் கிடைத்த பிறகும், இந்த பாரத நாட்டி லுள்ள எல்லா கட்சிகளும், மக்களும் நன்கு வாழவேண்டும். என்று வாழ்த்தும் முறையிலே "பாரத சமுதாயம் வாழ்கவே" என்று நமது பாரத சமுதாயம் அனைத்தையும் வாழ்த்தியும், பாராட்டியும் இருக்கிறான். இதைத் தவிர, இன்னும் அவ்வப்போது, அந்தக் காலத்திலே எழக்கூடிய பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் முறையிலேயும் கவிதை களை இயற்றி இருக்கிறான். "மன்னும் இமயமலை எங்கள் மலையே" என்று இப்போது நம்மிடையே எழுந்துள்ள பிரச்னைக்கும் தீர்வு காணும் முறையிலே கவிதை இயற்றி யிருக்கிறான். இதனால்தான் அவன் பாடல்களை, "The Song of Songs" என்று கூறவேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது.

பாரதி இந்தப் பாரத நாட்டோடு மட்டும் நிற்காமல் உலகத்தில் ஒற்றுமையைப் பற்றியும் பாடியிருக்கிறான்.

"ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே!
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்"

என்று நமக்கெல்லாம் ஒரு சீரிய காட்சியை அவன் இந்தக் கவிதையின் மூலம் நமக்கும் காட்டியிருக்கிறான். பாரத சமுதாயத்தின் ஒற்றுமையைப் பற்றி பாடிய அவன், அதே சமயத்தில் உலகத்தையும் தன் விஸ்வருபப் பார்வை யால் பார்க்கிறான். அதோடு நில்லாமல்,

"காக்கை, குருவி எங்கள் ஜாதி—நீள்
கடலும், மலையும் எங்கள் கூட்டம்;
நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்"

என்று உலகத்திலுள்ள எல்லா ஜீவராசிகளையும் கூட அவன் மூன்ருகப் பார்க்கின்ருன். இத்தகைய தேசியத் திற்கு நாம், "என்ன இயம்" என்று சொல்வது? அவனது

அகண்டாகார விஸ்வப் பார்வையில் எல்லா தேசீயமும் அடங்கியிருக்கிறது. பாரத நாட்டின் தேசீயம் மட்டுமல்ல; உலகத்தின் தேசீயம் மட்டுமல்ல; இந்தப் பிரபஞ்சத்தின் தேசீயமே அதில் அடங்கியிருக்கிறது. ''தன்னில் உலகத்தையும், உலகத்தில் தன்னையும்'' காண்பவன் அவன்; இதைத்தான் நான் அவனிடத்தில் காண முடிகின்றது. பாரதியின் கவிதைகளில், பாடல்களில் அரசியல், விஞ்ஞானம், சரித்திரம், அறம், வீரம், இன்னும் எவை எவையெல்லாம் உண்டோ அவையெல்லாம், அவை அத்தனையும் புகுத்தியிருக்கிறான். அதோடு, வள்ளுவம், கீதை போன்றவற்றையும் நமக்குக் குழைத்து அதனுள் புகுத்தித் தந்திருக்கிறான்.

1904-ல் கவிதை எழுத ஆரம்பித்த பாரதி, 1921-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ம் தேதி நம்மை விட்டு மறைந்தான். இந்த 17 ஆண்டுகளில் பாரதி வளர்ந்துள்ள அளவுக்கு உலகத்திலே எவன் வளர்ந்தான்? அவன் அடர்ந்து, படர்ந்து, விரிந்து, சிறந்து விளங்குவதைப் போல, இந்த உலகத்திலே யாருமே வளரவில்லை, விளங்கவில்லை என்று துணிவோடு சொல்லவும், கேட்கவும், தோன்றுகிறது. அப்படி வளர்ந்து விட்டான் அவன். அதனாலேதான் காலம் செல்லச் செல்ல, காலம் போகப் போக அவனது அற்புத, தெய்வீக கருத்துக்கள் இன்றைக்கும் உண்மையாகிக் கொண்டே வருகிறது. 'ரிக்' வேதத்தைக் காட்டி, 'உண்மை வெல்லும்' என்று சொல்கிறான். ஊழிக்காலத்தில், பாரதி தேவியை ஒரு புறம் சிவகாமியாகவும், அழகான ரூபமாக, சிருங்காரத்தின் சொரூபமாகச் சித்திரிக்கிறான். மறுபக்கம், பராசக்தியை பத்திரகாளியாகச் சித்திரிக்கிறான். படுபயங்கரமான முறையிலே, ஆக, அவன் அமைதியையும் பார்க்கிறான். போரையும் பார்க்கிறான். அப்போர் சிறுமைப் போராக இல்லாமல், தரம் கெட்ட போராக இல்லாமல், மேலும் மேலும் மனிதனை அமர நிலையில் வைக்கத்தக்கப் போராக மாற வேண்டுமென்பதற்காக, அதற்கு வீரமும், ரூபமும் ஒருங்கே இணைய வேண்டு

மென்று அப்படிப் பாடியிருக்கிறான். அவன் தன் கவிதைகள் மூலம் மனிதனை ஒரு முழு வீரனாகவே மாற்றுகிறான்.

பாரதி சாதியைத் தூள் தூளாக்குகிறான்.

**''பார்ப்பானை ஐயரென்ற**
**காலமும் போச்சே—வெள்ளைப்**
**பரங்கியைத் துரையென்ற**
**காலமும் போச்சே—பிச்சை**
**ஏற்பாரைப் பணிகின்ற**
**காலமும் போச்சே—நம்மை**
**ஏய்ப்போருக்கேவல் செய்யும்**
**காலமும் போச்சே''**

என்று இப்படி ஒரு பக்கம் சொல்லிவிட்டு, ''நந்தனைப் போல் ஒரு பார்ப்பான் உண்டோ'' என்று அவனைத் துணிவுடன் உயர்த்தியும் கூறியிருக்கிறான். இப்படியெல்லாம் சொல்லிவிட்டு, ''பாரத நாடு பாருக்குள்ளே நல்ல நாடு'' என்று நாட்டின் உயர்வைப் பற்றிக் கூறுகிறான். அப்பால் உலகத்தைப் பற்றியும் கூறுகிறான். அதற்குப் பிறகு, ''ஒன்று பட்டால் உண்டு வாழ்வே, நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே, நன்றிது தேர்ந்திடல் வேண்டும், இந்த ஞானம் வந்தாற் பின் நமக்கெது வேண்டும்;'' என்ற ஒரு உயர்தரமான உணர்வு நமக்கு ஏற்படவேண்டும்; நம்மிடையே அப்படிப்பட்ட ஒரு நிலையான ஒற்றுமை ஏற்பட வேண்டும்; அத்தகைய அமரநிலைக்கு சராசரி மனிதனும் உயரவேண்டும்; அதிலே தமிழ் மகன் தலைமகனாக நிற்கவேண்டும் என்று வலியுறுத்திச் சொல்கிறான். எப்படி? இன்று நடக்கும் சீனப்போரை ஒழிக்கப் பாடுபடுவதில் தமிழ்மகன் தலைசிறந்து நிற்க வேண்டும், அதோடு நிற்காமல், 'எல்லோரும் மக்கள், எல்லோரும் மன்னர்' என்று ஒரே லட்சியத்தைச் சொல்லி, 'வில்லினை எடடா, புல்லர்கள் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா' என்று நமக்கு ஒரு தெளிவு, அந்தத் தெளிவில் ஓர் உறுதியைக்

காண்பித்து, மேலும் மேலும் வளர வளர உயர வேண்டுமென்று சொல்கிறான்- இச்சமயத்தில் நம்மிடையே உள்ள பூசல்களை மறந்து, கூச்சல்களை மறந்து, எல்லோரும் ஒன்றுபட்டு உலகம் எல்லாம் மணம் வீச நின்று, அவன் வழி நடக்க இன்றைக்கு சர்க்காரும், மக்களும் சிறந்த முறையில் ஈடுபட்டிருப்பது நாம் செய்த புண்ணியமல்ல. வள்ளுவன் காலத்திலே, சங்க காலத்திலே உள்ள அத்தனை பேரும் செய்த புண்ணியமாகும். புண்ணியவான்கள் எல்லாம் செய்த புண்ணியம் ஆகும். சில ஆண்டுகளாக நான் சொல்லிவந்த கனவு, இப்போது நனவாகிவிட்டது. லட்சம் மக்களுக்குமேல் ஊர்வலத்திலே கலந்துகொண்டு, அதிலேயும் புலவர் பெருமக்கள், கலைஞர்கள், மாணவ மாணவிகள், பொதுமக்கள், சகோதர சகோதரிகள். ஆளும் கட்சியினர், ஆளாத கட்சியினர் ஆகிய அனைவரும் கலந்துகொண்டு ஊர்வலம் நடத்தியது எனக்கு ஒரு ஆனந்தக் காட்சியாக இருந்தது.

பாரதி நமக்கெல்லாம் ஒரு சிறந்த வழி காட்டி. பாரதி 'கான்ஷியஸ்னஸ்' நமக்கு ஏற்படவேண்டும். நமக்கு எவ்வித சந்தேகம் வந்தாலும், அது சமுதாய பிரச்னையானாலும், அல்லது வேறு எந்தப் பிரச்னை வந்தாலும், பாரதியிடம் சொல்லுங்கள். அவன் அவற்றிற்குத் தெளிவு தருவான்; உறுதி தருவான். பாரதியின் பாடல்களை, அவன் இயற்றியுள்ள கவிதைகளை நாம் துருவித் துருவிப் படிக்க வேண்டும். அவைகளை நாம் நம்முடைய குழந்தைகளுக்கும் மனப்பாடம் செய்து வைக்க வேண்டும். நமது செவிகளுக்கும் அமுதூட்டும் முறையில், நெஞ்சிற்கு வீரமூட்டும் வகையில் பாரதி பாடல்கள், கவிதைகள் இயற்றித் தந்திருக்கிறான். அவனது கவிதைகளை, பாடல்களை எல்லோரும் கற்பதற்கு வழி செய்யவேண்டும்-

அடுத்தபடியாக, நெடுநாளாக என்னுடைய நெஞ்சிலே ஒன்று இருந்து வருகிறது. அதாவது பாரதியின் பேரிலே ஒரு சின்னம் வரவேண்டுமென்பது. ஒரு பல்கலைக்கழகம்

வரவேண்டும். அதற்குப் பாரதிப் பல்கலைக்கழகம் என்று நாம் பேரிட வேண்டும். அந்தப் பல்கலைக்கழத்திலே உலகத்திலே உள்ள எல்லோரும் வந்து, அதிலே பயிலும் அளவிற்கு நாம் அதை வளர்க்க வேண்டும். உலகத்திலே என்னவெல்லாம் ''ஃபாகல்டீஸ்''? உண்டோ, அனைத்தையும் அங்கு ஏற்படுத்திக் கொடுக்க நாம் முன் வர வேண்டும். பாரதி பிறந்த நாடு தமிழ்நாடு. அப்பாரதியின் சின்னமாக, நாம் அவன் பேரிலே கண்டிப்பாக ஒரு பல்கலைக்கழகத்தை ஏற்படுத்த வேண்டுமென்று மீண்டும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

அப்படி, பாரதியின் பேரிலே ஒரு பல்கலைக்கழகம் நிறுவி, உலகிலுள்ள எல்லோருமே மூக்கின்மேல் விரலை வைக்கும்படியான முறையில் பல்கலைக்கழகம் செயலாற்ற வேண்டும். பாரதி எப்படி ஒரு வஸ்வரூபக் கவியோ, அதேபோல் பாரதி பல்கலைக்கழகமும் ஒரு விஸ்வரூப பல்கலைக்கழகமாகத் திகழவேண்டும். இப்படி ஓர் எண்ணம் என் நெஞ்சில் படுகிறது என்பதை இந்த நேரத்தில் நாட்டின் கவனத்திற்குக் கொணடுவந்து, பாரதியின் பாடல்களை, அவனது கவிதைகளை நாம் நாள்தோறும் படித்தால், அவன் நம்முடைய எந்தப் பிரச்னைக்கும் நம்பிக்கைத் தருவான்; தெம்பூட்டுவான்; முன்னேற வழியும் செய்வான்; மேலும் நமது சமுதாயம் வளரும் என்று கூறிக்கொண்டு பாரதிக்கும், இங்குள்ள அனைவருக்கும் எனது வணக்கத்தைக் கூறி முடிக்கிறேன்.

---

(1962-ம் ஆண்டு டிசம்பர் மாதம் சென்னை அரசாங்கத்தின் ஆதரவில் நடந்த சென்னை பாரதி ' ஜெயந்தி விழாவில் பேசியது. அமரர் ஜீவா பாரதியைப் பற்றித் தெரிவித்த கடைசிக் கருத்துரை இதுவே.)

# வரலாற்று உண்மைகள்!

ஆர். நல்லகண்ணு

''பாரதியின் பெயரைச் சொல்லித் தங்கள் சர்வாதிகாரக் கட்சியை வளர்த்து வருகிறார்கள் கம்யூனிஸ்டுகள் பாரதியின் புகழைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு வாழ்ந்து வருகிறவர்கள் கம்யூனிஸ்டுகள், இவர்களுக்கு பாரதியை பற்றிப் பேச வாயே கிடையாது'' என்று தனது வயிற்றெறிச் சலைக் கொட்டியிருக்கிறார் பகீரதன்

கம்யூனிஸ்டுகள் மீதுள்ள வெறுப்பில் வரலாற்று உண்மைகளை மறைக்கப் பார்க்கிறார்.

பாரதி மணி மண்டபத்துக்கு அடிக்கல் நாட்டு விழா நடந்தபோது நான் கல்லூரி மாணவனாக இருந்தேன். எனது சொந்த ஊரான ஸ்ரீவைகுண்டத்தில் கலைத்தொண்டர் கழகச் செயலாளராக இருந்தேன். நண்பர்களுடன் சேர்ந்து மணி மண்டப நிதிவசூல் செய்து அனுப்பியதால் எட்டயபுரம் விழாவில் பிரதிநிதியாகக் கலந்து கொண்டேன்.

ஆகையால் சில உண்மைகளைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

பாரதிக்கு மணிமண்டபம் கட்டுவதில் பேராசிரியர் கல்கி அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியை இன்னும் தமிழ் நாடு பாராட்டுகிறது. விடுதலைப் போராட்ட காலத்தில் சிறந்த சிறுகதைகள் நாவல்கள் படைத்த 'கல்கி'யைக் குறைத்துக் கூறவில்லை.

ஆனால் பாரதியைக் கணித்துக் கூறுவதில் கல்கி தவறியிருக்கிறார் என்பதை திரு பகீரதனும் மறுக்கமுடியவில்லை. வா. ரா. வின் முயற்சிக்கு ஆதரவு தருவதற்காகவே கல்கி அவர்கள் தமக்கே உரிய முறையில் ஒரு புதிய யுக்தியைக் கையாண்டார், எதிர்க்கட்சி ஒன்றை எடுத்துவிட்டால், காரசாரமான விவாதம் தொடர்ந்து எல்லோருடைய கவனமும் அந்த விஷயத்தில் திரும்பும் என நினைத்தார். 'பாரதி

மகாகவி இல்லை' என்று புதிய வாதத்தை எடுத்து விட்டார்.

இவரின் விவாதம் கல்கி அவர்களை வேடிக்கை மனிதராகக் காட்டுகிறது.

கல்கி அவர்கள் வெறும் விவாதத்தோடு நிற்கவில்லை. விடுதலை பெறுவதற்கு முந்திய 40ம் ஆண்டுகளில் பாரதி மகாகவியா, வெறும் தேசியக் கவியா பக்திப் பாடல்களைப் பாடிய வேதாந்தக் கவியா? என்ற விவாதம் காரசாரமாக நடைபெற்றது. இதெல்லாம் தமிழறிஞர் வ. ரா. அவர்களின் கருத்தைச் சாடிப் புறப்பட்டன.

ராஜாஜி அவர்கள் 1945-ல் 'அச்சமில்லை' என்ற நூலை எழுதினார். பாரதி வேதாந்தக் கவி என்று குறிப்பிட்டிருந்தார்.

இந்த நேரத்தில்தான் தமிழறிஞர் வ. ரா. அவர்கள் 'மகாகவி பாரதி' என்ற சிறந்த வாழ்க்கை வரலாற்று நூலை வெளியிட்டார்,

'பாரதியை வேதாந்த சிமிழுக்குள் அடைக்க முயற்சிக்காதீர்' என்று ராஜாஜிக்கு பதில் கொடுத்திருந்தார். இது கல்கி குழுவினருக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது.

கல்கி அவர்கள் துவக்கிய பாரதி மண்டபத்தில் நாட்டு விழாவுக்கு நாடெங்கும் பாரதி அன்பர்கள் கலந்து கொண்டனர். கம்யூனிஸ்டு தலைவர்கள் ஜீவானந்தமும் ராமமூர்த்தியும் விழாவில் பேசினர்கள். பத்து நிமிடத்திற்கு மேலும் விடாமல் ஜீவா அவர்கள் பாரதியின் பெருமையை எடுத்துரைத்த பேச்சு பாரதி அன்பர்களை மெய் சிலிர்க்க வைத்தது.

பாரதி விழாவில் இரண்டு அறிஞர்களை மட்டும் காணவில்லை. அதுவே அன்று கேள்விக்குறியாகவும் இருந்தது. பாரதியோடு வாழ்ந்து பாரதியின் பெருமையை இனம்கண்டு தமிழகத்தில் பாரதி புகழ் பரப்பிய இரு அறிஞர்கள் தமிழறிஞர் வ. ரா. புரட்சிக்கவி பாரதிதாசன் இவர்களைக் காணவில்லை. இவர்கள் இருவருக்கும் அழைப்பே அனுப்பப்படவில்லை; வேண்டுமென்றே புறக்கணிக்கப் பட்டார்கள் என்ற வேதனைக்குரிய நிகழ்ச்சியை 'ஜனநாயக வாதியாகத்' தம் பட்டம் அடிக்கும் பகீரதன் மறுக்க முடியாது.

மேலும் பகீரதன் இந்த விவாதத்தில் அந்த நாளில் பங்கு கொண்டவர்களில் கம்யூனிஸ்டுகளாகிய ஜீவானந்தமோ, ரகுநாதனோ, ஜெயகாந்தனோ நிச்சயமாக இல்லை, என்று கூறுவதில் அசட்டுப் பெருமையடைகிறார், அந்த விவாதம் நடந்து வந்த நேரத்திலும் அதற்கு முன்பிருந்தே ஜீவாவும், பாலதண்டாயுதமும் 'பாரதி மகாகவி' என்று இனம் கண்டு வ. ரா. வழியில் தமிழ் மக்களுக்கு பட்டி தொட்டி எங்கும் படித்தவர்கள் பாமரர்கள் மத்தியில் பாரதி பெருமையைப் பரப்பி வந்தார்கள் என்பதை நாடறியும், திரு. ரகுநாதனும் எழுத்துத் துறையில் பாரதியும் ஷெல்லியும் சங்கையும் காவிரியும் சிறந்த கட்டுரைகளையும் எழுதி பாரதியின் புகழைப் பரப்பி வருகிறார்.

திரு, ஜெயகாந்தனும் பாரதியைத் தனது 'ஞானகுரு' வாகக் கொண்டு பாரதி பாடல்களை எடுத்துக் கூறி வருகிறார் என்பதை தமிழ்நாடு நன்கு அறியும்.

ஜீவா நிறுவிய கலை-இலக்கியப் பெருமன்றம் தமிழ்நாடு பூராவும் ஆண்டு தோறும் பாரதிக்கு விழா எடுத்து வருகிறது.

1929ல் புதுவையில் நடைபெற்ற முதல் பாரதி விழாவில் தமிழறிஞர் சோமசுந்தர பாரதி தலைமை வகித்தார். ஜீவா பாரதியின் கவிதைச் சிறப்புகளை எடுத்துக் கூறியதைக்கேட்டு திரு. சோமசுந்தர பாரதியே மெய்சிலிர்த்துப் பாராட்டியதாக புதுவைத் தலைவர் வி. சுப்பையா அவர்கள் அண்மையில் கூறினார்.

மகாகவி பாரதியின் உலகப் பார்வையும், தொலைநோக்கும், மனித நேயமும், ஏகபதிபத்திய எதிர்ப்பும், முற்போக்குக் கருத்துக்களும் கவிக்குயில் சரோஜினிதேவி சொல்லியிருப்பதைப் போல உலகுக்கே சொந்தமானவை. பாரதியின் இப்பெருமைகளை கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் பாராட்டுகிறோம். உள்நோக்கம் கிடையாது; இதில் பெருமையும் அடைகிறோம்.

இதற்காக திரு. பகீரதன் போன்றோர் ஆத்திரம் அடைய வேண்டாம்.

# அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கு

## தா. பாண்டியன்

பாரதியார் நூற்றாண்டு விழாவையொட்டி, பாரதியாரை எத்தனை பேர், எத்தனை கோணங்களில் பார்க்கிறார்கள் என்பதை தமிழ்நாட்டு மக்களுக்குக் காட்டிவிட வேண்டும் என்ற நோக்குடன், சர்ச்சை ஒன்றை குமுதம் கிளப்பி விட்டிருக்கிறது. இது ஒரு வகையில் நல்ல பலனைத்தான் தந்து இருக்கிறது. இதில் திரு. பகீரதன் கம்யூனிஸ்டுக் கட்சி மீது காரமாகவே சாடியிருக்கிறார்.

''பாரதியின் பெயரைச் சொல்லி தங்களது சர்வாதிகாரக் கட்சியை வளர்த்து வருகிறவர்கள் கம்யூனிஸ்டுகள்'' என்று குற்றம் சாட்டியுள்ளார். பாரதியைப் பற்றிப் பேச வாயே இவர்களுக்குக் கிடையாது என்று கூறி ஒரு தடையுத்திரவோடு முடித்துள்ளார்.

இது அவரது ஆசை. எங்கள் வாயை மூடி விட ஆசைப்படும் பலரில் இவரும் ஒருவராக இருக்கட்டும். ஆனால் பாரதி விவகாரத்தை மட்டும் எடுத்துக் கொள்ளலாம்,

வ. ரா. மட்டுமே பாரதியை உலக மகாகவி என்று கூறி வந்தார். இதற்கு ஒரு எதிர்மறை இயக்கம் தேவைப்பட்டது. அப்பொழுதுதான் விவாதம் நடக்கும். உண்மை வெளிவரும், என்பதற்காக அப்படியொரு யுக்தியை கல்கி கடைப் பிடித்தாராம். அது எதிர்பார்த்த பலனைத் தந்ததாம். பிறகு, இதற்காகத் தான் அப்படித் தொடங்கினேன் என்று முடித்தாராம்!

பகீரதனின் பகீரத முயற்சி தெரிகிறது.

இதே போன்று, பாரதியை வைத்துக் கம்யூனிஸ்டுகள் வளரப் பார்க்கிறார்கள் என்று எதிர்மறையாக ஒருவாதத்தை கிளப்பி விட்டால்தான், கட்சி என்ற முறையில் பாரதிக்கு பெரிதும் தொண்டு புரிந்தது கம்யூனிஸ்டுக் கட்சியே என வாதம் முடியட்டும் என்பதற்காகத் தான் நானும் கல்கியின்

யுக்தியைக் கையாண்டேன் என பகீரதன் கூறமாட்டார் என எதிர்பார்க்கிறேன்.

பாரதியின் புகழ் பரப்ப பலரும் பாடுபட்டுள்ளனர். அதில் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தோருக்கும் பெரும் பங்குண்டு. ஜீவாவுக்கு தனிப்பங்கு உண்டு. தமிழகம் அறிந்த ஒன்றுக்கு சான்றுகள் தேவையில்லை.

பாரதிக்கு கம்யூனிஸ்டுகள் ஒன்றுமே செய்யவில்லை என்று பகீரதன் கூறி முடிப்பதற்குள் தி. க. செயலாளர் சகோதரர் கி. வீரமணி, கம்யூனிஸ்டுகள் பாரதிதாசனை விட பாரதியைக் கட்டி அழுகிறார்களே — புகழ் பாடுகிறார்களே என்று கோபப் பட்டுள்ளார்.

இரு கோணங்களிலிருந்து இருவரும் பார்த்துள்ளனர்.

சகோதரர் வீரமணி பாரதி பார்ப்பனனாய்ப் பிறந்த காரணத்தால் உள்நோக்குடன் தான் பாடியிருக்க வேண்டும் என்று முடிவு கட்டிக்கொண்டு, தன் முடிவுக்கேற்ற ஆதாரங் களைத் தேடியுள்ளார்.

ஆதாரங்களை வைத்து முடிவுக்கு வருவது தான் பகுத்தறிவுக்கொத்த வழியாகும். தி. க. தலைவர்கள், பிறப்பை வைத்து மனிதனை மதிப்பிடும் தவற்றைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள், இந்த ஒரு விஷயத்தில் பகுத்து அறிய வேண்டாம், கூண்டோடு எதிர்ப்பதே சரி என்ற தவ றுக்கு ஆளாகிறார்கள்.

ஒரு குலத்தை, ஒரு சமூகத்தை, ஒரு வர்க்கத்தை, ஒரு நாட்டை மதிப்பிடுவது வேறு அதில் உள்ள சில தனி நபர்களை மதிப்பிடுவது வேறு என்ற சிறிய உண்மையை மறுத்தால், உண்மை என்றைக்கும் புலனாகாது இது அரசியல் கட்சி களுக்கும் கூடப் பொருந்தும்.

சகோதரர் வீரமணி, பாரதியாரின் குழப்பங்கள், முரண் பாடுகள் பற்றிப் பேசுகிறார். எதை முந்திச் சொன்னார் என்ற காலவரையறை தெரியவில்லையே என்றும் கூறியுள்ளார்

1921-ல் பாரதியார் இறந்து போனார் என்பது ஆராய்ச் சிக்கு அப்பாற்பட்ட ஒரு விவரம். எனவே. அவர் எழுதி யுள்ள அனைத்தும் 1882-க்குப் பின் 1921-க்கு முன் சொன்ன

வை. சொன்னவற்றுள் எது முந்தியது? எது பிந்தியது? என்பது தெரியாத ஒன்றல்ல. ஒவ்வொரு பாட்டிற்கும், கட்டுரைக்கும் காலக் குறிப்பு உள்ளது, 1921-வரை நம் சம காலத்தில் வாழ்ந்த கவிஞர் எழுதியதற்கே காலக் குறிப்பு இல்லை என்று ஓங்கி அடித்தால் தொல் காப்பியம் தொடங்கி வள்ளலார் வரை எழுதியுள்ள இலக்கியங்களுக்கு காலத்தைக் குறிப்பது சுலபமா? முயன்று பார்க்காமல் தீர்ப்பு வழங்கக் கூடாது.

பாரதியார் 1920-ம் ஆண்டு எழுதிப் பாடிய பாடல்கள் தான் "பாரத சமுதாயம்" என்ற பாடலும், "உயிர்ப்பெற்ற தமிழர்" என்ற பாடலும்.

"முப்பது கோடி ஜனங்களின் சங்கம், முழுமைக்கும் பொதுவுடைமை" என்று முழங்கிய பாடல் தான அவரது இறுதிக் காலத்தில் எழுதப் பட்ட பாடல். கட்டுரைகள் 1918-க்கு முந்தியவை.

சாதி ஒழிப்பில் பாரதிக்குக் குழப்பம் என்கிறார் வீரமணி;

"ஜாதி மதங்களைப் பாரோம் —
ஜன்மம் இத்தேசத்தில்
எய்தினராயின் —
வேதியராயினும் ஒன்றே — அன்றி
வேறு குலத்தினராயினும் ஒன்றே."

என்றும்,

தகரென்று கொட்டு முரசே — பொய்மைச்
சாதி வகுப்பினை எல்லாம்
திகரென்று கொட்டு முரசே
இந்த நீநிலம் வாழ்பவரெல்லாம்"

என்றும்,

நந்தனைப் போல் ஒரு பார்ப்பான் — இந்த
நானிலத்தில் கண்டதில்லை — பாப்பா

என்றும்,

சாதிகள் இல்லையடி பாப்பா
குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்

என்றும், கூறியிருப்பதோடு,

"அசுத்தமான தண்ணீரை பிராமணன் கொண்டு வந்தாலும் குடிக்கலாகாது. சுத்தமான தண்ணீரை தீண்டத்தகாதவன் கொணர்ந்தாலும் குடிக்கலாம் எனகிறேன். இப்படிச் சொல்வதை ஏற்க மாட்டார்கள். என்னை விருந்துக்கு அழைக்க மாட்டார்கள். ஏன, என் ஈமச் கிரியைகளுக்குக் கூட வரமாட்டார்கள்" என்று பாரதியார் எழுதியவர்.

எனவே சாதி எதிர்ப்பு என்று இறங்கினார்.

தனக்கு எத்தகைய எதிர்ப்பு வரும் என்பதைத் தெரிந்திருந்தும சாதி வேறுபாடுகளை எதிர்த்தவர் பாரதியார். எனவே, சுதந்திரப் "பள்ளு" பாடினார்

பார்ப்பானை, ஐயரென்ற காலமும் போச்சே வெள்ளைப் பரங்கியைத் துரை யென்ற காலமும் போச்சே என்று பாடினார்.

இத்தகையவரை அரியசூழ்ச்சி செய்தவர் என்று கூறுவது அறிவுக்குப் பொறுத்தமான வாதமாகாது.

ஆரிய நாடு, வேதம்.... என்று பல இடங்களில் கூறியதால் இவருக்கு ஆரிய ரத்தம் என்போர் "மறவன் பாட்டை" ஒருமுறையாவது படிப்பது நல்லது.

"சரி நிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே" என்பது தான் பாரதியின் நிலை.

"எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் ஓர் நிலை; எல்லோரும் இந் நாட்டு மன்னர்" என்று சந்தேகத்திற்கு இடமில்லாமல் கூறியிருப்பதைக் கவனிக்கவும்.

இந்து மதத்தின் மீது பாரதிக்குப் பற்று ஆழமாக இருந்தது. இருந்தும் அதைச் சீர்திருத்த வேண்டும் என பச்சையாக எழுதிய பாவலன் அவன்.

"பாரதியும் சாதிகளும்" என்ற நூலில் நிறைய மேற்கோள்களைக் காட்டியுள்ளேன். இடமின்மையால் இங்கு மேற்கோள்களைச் சுருக்கிக் கொள்கிறேன்.

அடுத்த ரஷ்யப் புரட்சி பற்றியும் வீரமணி, பாரதியின் பார்வையைக் கிண்டல் செய்துள்ளார். "பாரதியும் யுகப்

புரட்சியும்'' என்ற நூலில் இதற்கு விரிவான பதில் தந்துள்ளேன். ஓரிரு கருத்துக்களை மட்டும் இங்கே பார்க்கலாம்.

பாரதி ரஷ்யப் புரட்சி பற்றி 1906ல் எழுதியிருக்கிறார். அது 1905ல் நடந்து வெற்றி பெற முடியாது போன முதல் புரட்சிபற்றியது. 1917ல் புரட்சி வென்றபின் இரு பாடல்கள் எழுதினார். அதில் ஒன்று ''காலைப் பொழுதினிலே' என்ற தலைப்பில் உள்ள பாட்டு.

அதில், ''கற்றறிந்த ஞானி, கடவுளையே நேராவான்'' என லெனினை பாரதி வருணித்துள்ளார். முட்டாள் எனக் கூறவில்லை. முழுப்பாட்டையும் தயவு செய்து படித்துக் கொள்க.

அடுத்து புரட்சி முறை இந்தியாவிற்குப் பொருந்தாது என்று பாரதி கைவிட்டுவிட்டது பற்றிய கதை. ஆமாம். பாரதி அப்படித்தான் எழுதியிருக்கிறார். அமைதி வழியில் இந்தியாவில் மாற்றம் வேண்டும் என எழுதியுள்ளார். கொலைகள் வேண்டாம் என்கிறார். இது முரண்பாடாக வீரமணிக்குத் தெரிகிறது.

எதிர்க்கேள்வியைக் கேட்க வேண்டிய நிலையை அவர் எனக்கு ஏற்படுத்திவிட்டார்.

பாரதி ரஷ்யப் புரட்சி பற்றிக் கேள்விப்பட்டவுடன்; அதை வரவேற்று எழுதினார். ஏன் வேறு பலர் எழுதவில்லை? போகட்டும்..

பாரதி செய்திகளைக் கேள்விபட்டு எழுதியவர். ஆனால் பெரியார் ரஷ்யாவுக்கே போய் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து, சுயமரியாதை சமதர்ம இயக்கத்தையே தொடங்கியவர். கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர விருப்பம் தெரிவித்தவர்.

இருந்தும் இந்தியாவில் மாற்றம் கொண்டு வர முதலில் மதங்களை ஒழிக்க வேண்டும். சாதிகளை ஒழிக்க வேண்டும். மூட நம்பிக்கைகளை ஒழிக்க வேண்டும்.... இதற்காக பகுத்தறிவுப் பிரச்சாரம் வேண்டும் என்று தானே கிளம்பினார். நீங்களும் அதைத்தானே சொல்லிக் கொண்டு இருக்கிறீர்கள்.

நேரில் பார்த்து வந்து, சமதர்ம பிரச்சாரமும் செய்த பெரியாரே. இந்தியாவுக்கு ஒரு தனி வழி தேவை என்று கருதினுல் ரஷ்ய புரட்சிக்குப் பின் மூன்றாண்டுகள் மட்டுமே வாழ்ந்தவன், இந்தியாவிற்கு என்று தனி வழி என்று கருதியதே மிகப்பெரிய முரண்பாடு ஆகி விடுமா?

அந்த வழி பொருந்தாது என்றுனே தவிர. பொது உடைமை பொருந்தாது என்று எங்காவது வாதிட்டுள்ளாரு? இல்லை.

ரஷ்யப் புரட்சி வென்று நம் நாட்டுடன் நெருங்கிற உறவும் கொண்டு, உண்மைகள் பல தெரிந்த பிறகும், பல பல பாதைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் பகுத்தறிவாளர்கள், 1921ல் மறைந்து போன கவிஞன் தெரிவித்த ஆசையைக் கூட சகித்துக் கொள்ள முடியவில்லையே,

இறுதியாக, பாரதியாரின் பிரியர்கள். ரசிகர்கள், புகழ் பாடுவோர், விழா எடுப்போர் என்று பலரையும் மனத்திற் கொண்டு சாடியுள்ளார் வீரமணி பாரதி விழாவே நல்ல நேரம் பார்த்துத்தானே தொடங்கப்படுகிறது பக்த கோடிகளால் என்கிருர்.

இதற்கும் பாரதியாரா பொறுப்பு? அப்படியாஞல் பெரியாரிடம் பயின்று, உடனிருந்து வெளிவேறிய பலர் செய்து கொண்டிருக்கும் திருத்தொண்டை நான் பட்டியல் போட்டுக் காட்டலாமா?

"முப்பாட்டன் வெட்டிய கிணறு என்பதால், உப்புத் தண்ணீரைக் குடிக்காதே" என்று பாரதி பஞ்சதந்திரக் கதையைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

யாரையும் ஏற்க வீரமணி மறுத்தாலும், பாரதிக்கு, சமமான புலமையும், சம காலத்தவரும், பகுத்தறிவாளரு மான பாரதிதாசன் கூறியிருப்பதையாவது மறுக்கக் கூடாதல்லவா?

பாரதியைப் பற்றி பாரதிதாசன் கூறுகிறபோது,

"அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கவன்" என்றும், "புதிய படரும் சாதிப் படைக்கு மருந்து, மண்டும் மதங்கள்

அண்டா நெருப்பவன்'' என்றும், ''நாட்டைக் கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு'' என்றும் கூறியிருப்பதன் பொருளை உணர்வது நல்லது.

''அணிசெய் காவியம் ஆயிரங் கற்பினும், ஆழ்த்த கவியுளம் காண்கிலாதார்'' என்ற பழிக்கு நாம் ஆளாகக் கூடாது.

ஒருவரை மதிப்பிடும் போது
குணம் நாடி குற்றமும் நாடி - அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்''

என்ற குறட்பாவை நினைவில் கொள்ள வேண்டும்.

பூணூல் போட்டு விட்ட சின்ன விஷயத்தை பெரிதாகக் காட்ட வீரமணி முயன்றுள்ளார். அதைப் போடுவதாலும் சரி, வெட்டுவதாலும் சரி — சமூகச் சிக்கல்கள் தீராது. தீர வழி இருக்கின்றது. அதை ஏற்க ஒரு தனித் துணிச்சல் தேவை. அதை மறைக்க திறமை மிக்க வாதப் பிரதி வாதங்கள் பயன்படாது.

நாங்கள் பாரதியைப் பாராட்டுகிறோம், தொடர்ந்து புகழ் பரப்புவோம். பகீரதன்களிடம் பட்டயம் பெற அல்ல.

# பகீரதன் உண்மையை மறைக்கிறார்

## கவிஞர் பாஅண்ணன்
(பி. இ பாலகிருஷ்ணன்)

''குமுதம்'' இதழில் 'அரவிந்தை நாராயணன் உளறுகிறார்' எனும் தலைப்பில் பகீரதன் எழுதிய கடிதம் பார்த்தேன். பகீரதன் முழு உண்மையை அப்படியே மறைக்க முயற்சித்திருக்கிறார்.

''பாரதியாரின் நூல்களை மக்களின் சொத்தாக மாற்றுவதில் பெரும்பங்கு வகித்து அதில் வெற்றி கண்டவர் கல்கி........''

''பா. ஜீவானந்தமோ, கே. பாலதண்டாயுதமோ, ரகுநாதனோ பாரதியின் புகழ்பரப்புவதில் எவ்வித பங்கும் இல்லை என்றும், பாரதியின் பெயரைச் சொல்லி தங்கள் சர்வாதிகாரக் கட்சியை வளர்த்து வருகிறவர்கள் கம்யூனிஸ்டுகள். பாரதியின் புகழை தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு வாழ்ந்து வருகிறவர்கள் கம்யூனிஸ்டுகள். இவர்களுக்குப் பாரதியைப் பற்றிப் பேச வாயே கிடையாது'' என்று பகீரதன் மறைந்த ஜீவாவையும், பாலதண்டாயுதத்தையும் தாக்கி எழுதியுள்ளார்.

''பிற்காலத்தில் பாரதி பிறந்த எட்டயபுரத்தில் பாரதிக்கு நிலையான மண்டபம் கட்டியவர் கல்கி'' என்றும் அவருடன் பழகிய அனுபவத்தால் இதைக் கூறுவதாக்க் கூறுகிறார்.

என்னைப் பொறுத்தவரை ஜீவாவுடனும் பாலதண்டாயுதத்துடனும் பழகி அனுபவம் உடையவன் என்ற முறையிலும் நானும் பின்வரும் ஆதாரங்களுடன் ''குமுதம்' இதனை எழுதுகிறேன்.

ஜீவா தான் பாரதியை முழு மனிதனக மக்களுக்குச் சித்தரித்ததர். பாரதியின் தேசீயப் பாடல்களிலிருந்து தெய்வ பக்திப் பாடல்கள் வரை உள்ள கருத்தாழத்தைச் சரியாகப் படம் பிடித்துக் காட்டி, தமிழ்நாட்டில் பட்டி தொட்டிகளில்லாம் புகழ் பரப்பியவர். தெய்வபக்தி இடத்தில் தேசபக்தியை வைத்துப்பாடிய முதல் கவிஞன் பாரதி என்று பிரசாரம் செய்தவர் ஜீவா.

பாரதியின் நூல்களை மக்களின் சொத்தாக மாற்ற வேண்டும் என்பதில் யார் முதலில் குரல் கொடுத்துப் போராடியவர் என்பது தான் இங்கு எழும் கேள்வி. கல்கியா அல்லது ஜீவானந்தமா என்பது தான் அந்தக் கேள்வி

1947-ல் அக்டோபர் மாதம் எட்டயபுரத்தில் பாரதி மணிமண்டபத்திறப்பு விழா அன்று ஜீவாவின் முயற்சியால் நூல் வடிவில் இக்கோரிக்கை வலியுறுத்தி ''ஜனசக்தி'' பிரசுராலயம் வெளியிட்ட நூலில் வலியுறுத்தப்பட்டது. இதற்குப் பின்னர்தான் கல்கியும் மற்றவர்களும் இந்தக்

கோரிக்கைக்கு ஆதரவு அளித்தார்கள். பின்னர் இது வெற்றியும் கண்டது. இதற்கான மிகப் பெரிய பிரச்சாரத்தை துவக்கியவர் ஜீவா என்றால் அது மிகையாகாது. ஜீவா 1947-ல் எழுதிய நூலில் வரும் வரிகள்:

### பாரதி வழி வாழ்க

"தமிழ் மக்களின் சிறந்த பண்பாடுகளையும் உணர்ச்சி ஓட்டங்களையும் உய்த்தறிந்து, துய்த்தறிந்து உணர்ந்தவன் பாரதி.

தமிழ் மக்களின் எதிர்கால வாழ்வு எப்படியிருக்கும் என்று சித்தரித்தவன் பாரதி.

தமிழ் மக்களின் முன்னேற்றப் பாதையில் கண்ட தடைக் கற்களைத் தூக்கி யெறிந்து பாதையைப் புதுப்பித்தவன் பாரதி.

'பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம் விழி பெற்றுப் பதவிகொள்ள." "வெள்ளத்தின் பெருக்கைப் போல் கலைப் பெருக்கும், கவிப் பெருக்கும் மேவச்" செய்தான் பாரதி.

**"நமக்குத் தொழில் கவிதை, நாட்டுக் குழைத்தல்**
**இமைப் பொழுதும் சோரா திருத்தல்"**

என்ற அடிகளுக்கு இலக்காக வாழ்ந்தவன் பாரதி.

பிரத்தியட்ச உண்மைகளையும் யதார்த்த நிலைமைகளையும் கலையின் அடிவாரங்களாக கொண்ட அருங் கலைவாணன் பாரதி.

"எழுத்தாளன், மனித ஆத்மாவை-மனித சிந்தனையைச் செம்மைப்படுத்தும் எஞ்ஜினீர்" என்கிறார் ஸ்டாலின். தற்காலத் தமிழகத்தில் பாரதிக்கு நிகரான என்ஜினீயர்—உயிர்க் கலைஞன்—மகாகவி—யாருமில்லை.

ஆகவே "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா" என்று பட்டிக்காட்டானை—சாதாரணத் தமிழ் மகனைக் கொண்டு பாரதியைப் புகழ்ந்து பாடச் சொன்னார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

James Boswell 1740—95
wrote the Biography of Johnson



பாரதி காலத்திற்குப் பின் பாரதியை எந்தக் கவிஞனும் புறக்கணிக்க முடியவில்லை. எந்த எழுத்தாளனும் அலட்சியம் செய்ய இயலவில்லை. எந்த மக்களாலும், தலைவர்களாலும், கிளர்ச்சிகளாலும் அசட்டை செய்ய முடியவில்லை. அத்தகைய தனிப்பெரும் பீடத்தில் ஏறிக் கொண்டான். பாரதி, ஆகவே இந்த சகாப்தத்தைப் "பாரதி சகாப்தம்" என்கிறார், அறிஞர் திரு வி.க.

தேதிய கவி நாமக்கல் கவிஞர் தம்மை 'பாரதி பரம்பரை' என்பதில் பெருமை கொண்டாடுகிறார்

தமிகத்தின் இன்றைய தலைசிறந்த உயிர்க் கவிஞனாகிய கனகசுப்புரத்தினமோ "பாரதிதாசனாகி" விட்டார்.

பாரதியின் பாஸ்வெல் வ. ரா. 'பாரதிதான் தமிழ்" என்றால் வியப்பேது?

இளம் கவிகளும் எழுத்தாளர்களும் பாரதி வழியைப் பின்பற்றி, அன்றாடப் போராட்டங்களிலிருந்து இறுதி லட்சியமாகிய சுதந்தர இந்தியாவில் சுதந்தரத் தமிழகமாம் புதிய தமிழகத்தைக் காணும் பெரும் போராட்டம் வரையில் தமிழ்ப்பொது மக்களோடு தோளோடு தோள் நின்று அரும்பணி ஆற்றுவார்களாக!

> பாரதி நூல்களும், பாரதி பாடல்களும் தனி உரிமைப் பிடிப்பிலிருந்து விடுபட், தமிழர்களின் பொதுவுடைமையாகிச் சிறப்புற, நாட்டன்பர்களும் அரசியலாரும் பொது மக்களும் முயன்று, பாரதி இலக்கியம் முழுப்பயன் தரச் செய்வார்களாக,

பாரதி நூல்களை வெளியிடும் உரிமை திரு விஸ்வநாத ஐயர் (பாரதியாரின் தம்பி) கையில் இருக்கிறது. பேசும் படம், வானொலி, இசைத் தட்டு இவைகளில் பாரதி பாடல்களைப் பாடுவதற்கான உரிமையை மெய்யப்பச் செட்டியார் ஒருவர் பணம் கொடுத்து விலைக்கு வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்.

பாரதி இலக்கியம் தமிழ் மக்களின் பொதுஉடைமை—ஏன், உலகத்து மக்களுக்குக் கூட காந்தி இலக்கியம்போல் பாரதி இலக்கியமும் பொதுஉடைமையாக— தனி உரிமையில் சிக்கிக்கிடப்பது விடுபட—தமிழ் மக்களும் சென்னை சர்க்காரும் தகுந்த நடவடிக்கை எடுக்க உடனே முன்வர வேண்டும்.

Dr - Samuel Johnson
English man of letters and lexicographer
Dictionary Published in 1755

In 1773 Boswell and Johnson made Tour in the Highlands of England

''சேமமுற வேண்டுமெனில் தமிழ் முழக்கம்
தெருவெல்லாம் செழிக்கச் செய்வீர்!''

இது பாரதியின் ஆணை. இந்த ஆணையை நிறைவேற்ற பாரதி நூற்களை—இலக்கியத்தை யாரும் பதிப்பித்து வெளியிட உரிமை ஏற்படவேண்டும். பாரதியின் இளவல் திரு.விஸ்வநாத ஐயர் காலமறிந்து தாமே முன்வந்து, பாரதி நூல்களைப் பொதுஉடைமை ஆக்கவேண்டும்: அப்போது தமிழ் மக்களின் நன்றி அவருக்கு என்றும் உரியதாகும். பணத்திற்கு ஆசைப்பட்டு, தனி உரிமைக்கே நின்றால் பழிதான் ஏற்படும். பாரதி குடும்பத்திற்கு—விஸ்வநாத ஐயர் உட்பட—ஒரு நல்ல நன்கொடை அளிக்கத் தமிழ் மக்கள் தயங்கமாட்டார்களென்று எதிர்பார்க்கலாம்.

''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்''

பாரதியின் இந்த ஆணையை நிறைவேற்ற பாரதி பாடல்கள் தங்கு தடையின்றி, வானொலி, இசைத்தட்டு, பேசும் படங்களில் தாராளமாகக் கேட்கப்பட வேண்டும். ஆகவே, மெய்யப்பச் செட்டியாரும் பாரதி பாடல்களில் வியாபாரம் நடத்துவதை ஒழித்து, தமிழ் மக்களின் நன்மதிப்பைப் பெற முன்வர வேண்டும்.

விஸ்வநாத ஐயரும், மெய்யப்பச் செட்டியாரும் தமிழ் மக்களின் வேண்டுகோளை நிறைவேற்றக் காலம் கடத்துவார்களானால், சென்னை சர்க்கார் பாரதி பாடல்களும் பாரதி இலக்கியமும் நாட்டிற்குப் பொது என்று பிரகடனம் செய்ய வேண்டும் அதற்காகத் தமிழ் மக்கள் முறையான, தீவிரமான கிளர்ச்சியிலும் நடவடிக்கைகளிலும் உடனே இறங்கித் தீரவேண்டும்.*

* (1947 அக்டோபர் மாதம் எட்டயபுரத்தில் பாரதி மணி மண்டபத் திறப்பு விழாவன்று 'ஜனசக்தி' பிரசுராலயம் வெளியிட்டது.)

இவ்வாறு ஜீவா பாரதியின் புகழ் பரப்புவதில் முழு மூச்சாக ஈடுபட்டார். இதுதான் உண்மை. பகீரதன் இதை அப்படியே மறைக்கிறார்.

1962-ல் சீனா இந்தியாவின் மீது படையெடுத்தபோது, சென்னை ராஜாஜி மண்டபத்தில் அரசு எடுத்த பாரதி விழாவில் ஜீவா பேசும்போது, பாரதியின் பெயரால் பாரதி

பல்கலைக் கழகம் ஒன்றை ஏற்படுத்த வேண்டுவது அரசின் அவசர அவசிய கடமை என முதலில் குரல் கொடுத்தவர். ஆனால், இன்று அக்கோரிக்கை நிறைவேறுகிறது.

பாரதியின் புகழ் பரப்புவதில் யார் ஆக்க பூர்வமாக செயல்பட்டார்கள் என்பதுதான் முக்கியம். பாரதியின் படைப்புகள் வ. ரா., ஜீவா போன்றோர்களின் முயற்சியினால் விஸ்வரூபமாக காட்சிக்கு வந்த பிறகு கண்திறந்து பார்த்தவர் கல்கி காலம் கடந்து அவர் சிந்தித்து, பாரதிக்கு மணிமண்டபம் எழுப்புவதில் பங்கேற்றவர் கல்கி. இவர் புறத்தோற்றத்தில் நினைவுச் சின்னம் எழுப்ப முயன்றவர். ஆனால் ஜீவானந்தமோ அகத் தோற்றத்தில் நினைவு சின்னம் எழுப்பும் வகையில் அரசுடன் போராடி வெற்றி கண்டவர். பாரதியின் படைப்புக்களைப் பொதுச்சொத்தாக மாற்றுவதில் வெற்றி கண்டவர் ஜீவா. பின்னர், மலிவுப் பதிப்புகளாக பாரதியின் கவிதைகள் வெளிவந்து மக்கள் நெஞ்சங்களின் நினைவுச் சின்னமாகப் பதிந்துவிட்டது.

அடுத்து, கே. பாலதண்டாயுதமோ, பாரதியின் ''குயில் பாட்டு'', ''கண்ணன பாட்டு'' ஆகிய கவிதைகளை பொள்ளாச்சி தேசபக்தர் துரைசாமிப் பிள்ளையின் மூலம் ஆங்கிலம் மொழியாக்கம் செய்விக்கத் தூண்டி, அவர் சேர்மனாக பதவி வகித்த நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் நிறுவனத்தின் மூலம் 1966-லேயே வெளியிடச் செய்தவர். இன்று ஆங்கிலத்தில் வெளிவந்த பாரதியின் கவிதைத் தொகுப்பில் ''Bharathi's Poems—Kannan pattu & Kuyeel Pattu'' எனும் இந்நூல் தான சிறந்தது எனப் பாராட்டைப் பெற்றுள்ளது.

அடுத்து ரகுநாதனோ, ஷெல்லியின் படைப்புடன், பாரதி படைப்புகளை ஒப்புநோக்கி, இதுவரை இதற்கு ஈடாக எந்த ஆய்வு நூலும் வெளிவரவில்லை என்று கூறத்தக்கவாறு வெளி வந்த முதல் நூல் அவரது ''பாரதியும் ஷெல்லியும்'' என்கிற நூல் இந்நூலையும் அதே நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் நிறுவனமே வெளியிட்டது. 1964-ஆம் ஆண்டிலே வெளிவந்த இந்நூலை ஆதாரமாக வைத்து. பி. எச். டி. பட்ட ஆராய்ச்சியை மேற் கொள்ளும் ஆய்வாளர்கள் இதனை ஆதார நூலாகப் பயன் படுத்துகிறார்கள் என்கிற உண்மையை வாசகர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

வம்லாற்றைப் புரட்ட பகீரத முயற்சியை மேற்கொள்ள வேண்டாம்

O

# பாரதி பற்றிய நல்ல நூல்கள்

| புத்தகத்தின் பெயர் | ஆசிரியர் |
|---|---|
| பாரதி தரிசனம்—முதல் பாகம் | — மகாகவி பாரதியார் |
| பாரதி தரிசனம்—2-ம் பாகம் | — மகாகவி பாரதியார் |
| பாரதி பாடல்கள் | — மகாகவி பாரதியார் |
| மிதவாதிகளுக்கு டால்ஸ்டாயின் சடிதம் (பாரதியின் ஒப்புநோக்கு) | — மகாகவி பாரதியார் |
| பாரதியும் ஷெல்லியும் | — ரகுநாதன் |
| புது நெறி காட்டிய பாரதி | — ஆர். கே. கண்ணன் |
| இரு மகா கவிகள் (பாரதி தாகூர் பற்றிய ஒப்பீடு) | — க. கைலாசபதி |
| பாரதி பாரதிதாசன் கவிதைமதிப்பீடு | — டாக்டர் சி. கனக சபாபதி |
| பாரதியும் தொழிலாளரும் | — நா. வானமாமலை |
| பாரதி வழி | — ப. ஜீவானந்தம் |
| பாரதியைப் பற்றி ஜீவா | — ப. ஜீவானந்தம் |

**மொழியாக்க நூல்**

| | |
|---|---|
| Bharathi's Poems Kannan Pattu & Kuyil Pattu in English | Translated by : — S. Doraisamy Pillai |

**இவை அனைத்தும் கிடைக்கும் இடம் :**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை-98

| | |
|---|---|
| பாரதி கண்ட தாய்க்குலம் | — பி. இ பாலகிருஷ்ணன் |

அருண்குமார் பதிப்பக வெளியீடுகள் :

| | |
|---|---|
| பாரதியும் சாதிகளும் | — தா. பாண்டியன் |
| பாரதியும் யுகப் புரட்சியும் | — தா. பாண்டியன் |

மீனாட்சி புத்தக நிலையம் வெளியீடு :
222, டாக்டர் நடேசன் சாலை, சென்னை-5

| | |
|---|---|
| பாரதியின் காலமும் — கருத்தும் | — ரகுநாதன் |

கலைஞன் பதிப்பகம் வெளியீடு :
பாண்டி பஜார் சென்னை-17

| | |
|---|---|
| பாரதி பால பாடம் | — த. ஜெயகாந்தன் |

அச்சிட்டோர் : நவஜோதி அச்சகம், சென்னை-2.